## III.—CALLING ATTENTION TO A FIRE ACCIDENT IN PERAMBUR BARRACKS, MADRAS.

Mr. SPEAKER : Dr. Srimathi Sathiyavanimuthu has given notice of a motion under rule 40. She will call the attention of the Hon. Minister with a brief speech.

Dr. Srimathi SATHIYAVANIMUTHU : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்த மாதம் நாலாம் தேதி பிற்பகல் ஒரு மணிக்கு கனகராய முதலித் தோட்டம் என்ற இடத்தில் ஏறக்குறைய 200 வீடுகள் தீக்கு இரையாகி இருக்கின்றன.

(Sri P. U. Shanmugam in the Chair)

இதற்கு காரணம் பலவாறு கூறப்படுகிறது. விரைவில் தீயணைக்கும் படையினர் வராததும், வந்த பிறகும் நீர்தேக்கம் (Fire hydrant) எங்கு இருக்கிறது என்று தெரியாத காரணத்தாலும் அந்த தீயை அணைக்க முடியாமல் திண்டாடியிருப்பதாகத் தெரிகிறது. நகர சபையினரும் தாமதித்தே வந்திருக்கிறார்கள். இதன் நடுவில் வீசிய பெரும் காற்றினால் மேலும் பல வீடுகள் பாதிக்கப்பட்டன, என்று பொதுமக்கள் சொல்லுகிறார்கள்.

அந்த தீ ஏற்பட்டதற்கு காரணம் அங்கே வாழும் பலமக்கள் லைசென்ஸ் இல்லாமல் கொல்லுபட்டறையும், அவல் பட்டறையும் வைத்திருப்பதால் அதிலிருந்து இந்த தீ ஏற்பட்டிருக்கலாம் என்று கூறப்படுகிறது.

(Mr. Speaker in the Chair)

தீயணைக்கும் படையினர் தாமதித்து வந்ததாலும் நீர்தேக்கம் தெரியாமல் திண்டாடியதாலும் தீயை உடனே அணைக்கமுடியவில்லை. 210-க்கு மேற்பட்ட வீடுகள் எரிக்கப்பட்டு மக்கள் நடுத்தெருவில் நிற்கிறார்கள். அவர்களுக்கு உதவிசெய்ய வேண்டிய நடவடிக்கைகள் துரிதமாக எடுக்கப் படவில்லை. நகரசபையினரும் ஒருவேளை உணவுக்கு வழி செய்திருக்கிறார்களே தவிர விரைவில் தங்குவதற்கு வீட்டுவசதி செய்து கொடுக்க இது வரை முன்வரவில்லை.

சர்க்கார் வழக்கம்போல் ரூ. 30 அவர்களுக்குக் கொடுப்பதாக தீர்மானித்திருந்தாலும் அந்த இடம் அவரவர்களுக்குச் சொந்தமான இடம் அல்ல. ஒரு குறிப்பிட்ட முதலியாருடைய தோட்டத்தில் அவர்கள் எந்த விதமான வாடகையும் கொடுக்காமல் இலவசமாக வீடுகளைக் கட்டிக் கொண்டு குடியிருந்து வந்தார்கள். அவர்களிடமிருந்து குடிக்கூலி கூட வசூலிக்கப்படவில்லை என்றுகூட சொல்லப்படுகிறது. சர்க்கார் கொடுக்கக் கூடிய இந்த முப்பது ரூபாயை வைத்துக்கொண்டு அவர்களால் வீடுகள் கட்டிக்கொள்ள முடியாமல் போகலாம். வீடு கட்டிக்கொள்வதற்கு முடிந்தாலும் யாருடைய இடத்தில் யார் போய் வீடுகளைக் கட்டிக்கொள்வது ? அப்படிச் செய்தால் அது முறையற்ற காரியமாகும். அது முறையற்ற காரியம் என்று நகரசபைகூட தடுக்கலாம். அதனால் அவர்களுக்குக் கொடுக்கப்படும் பணத்தை வைத்துக்கொண்டு வீடுகள் கட்டிக்கொள்ள முடியாமலிருக்கிறார்கள். இதையெல்லாம் சர்க்கார் கவனித்து அவர்கள் எல்லோரும் வீடுகள் கட்டிக்கொள்வதற்கு போதுமான பணத்தைக் கொடுக்க முன் வரவேண்டும். இல்லாவிட்டால் அந்த இடத்திற்குச் சொந்தமானவருக்கு பணத்தைக் கொடுத்து சர்க்கார் அந்த இடத்தை வாங்கி அதை நகர சபைக்குக் கொடுத்து நகரசபை அவர்களுக்கு வீடுகளைக் கட்டிக்கொடுக்க முன் வரவேண்டும். அந்த முறையில் நகரசபைக்கு இந்தச் சர்க்கார் உத்தரவு அனுப்பிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிச் செய்தால் ஆயிரக்கணக்கான மக்களுக்கு நாம் நல்லது செய்தவர்களாவோம்.

13th September 1958] [Dr. Srimathi Sathiyavanimuthu]

இன்னும் அந்தத் தீயில் 18 வயதுள்ள பெண் ஒருவள், அவளும் சமீபத்தில் திருமணம் ஆனவள், பற்றி எரிந்திருக்கிறாள். இப்படிப்பட்ட பல கோரமான நிகழ்ச்சிகள் இந்த இடத்தில் நிகழ்ந்திருக்கின்றன. ஆகவே கனம் அமைச்சர் அவர்கள் வழக்கம் போல் அவர்களுக்கு முப்பது ரூபாய் பணம் கொடுக்காமல் இன்னும் சற்று விரிவாகவே அவர்களுக்குப் பணம் கொடுத்து உதவும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். முப்பது ரூபாய்க்கு அதிகமாக ஐம்பது ரூபாயாவது அவர்களுக்குக் கொடுத்து உதவ வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். தலைக்கு ஐம்பது ரூபாய் வீதம் கொடுத்து அந்த இடத்தின் சொந்தக்காரருக்கு பணத்தைக் கொடுத்து அந்த மனைக்கட்டை விலைக்கு வாங்கி அங்குள்ளவர்கள் வீடுகள் கட்டிக் கொள்வதற்கு வசதி செய்து கொடுக்க வேண்டும். ஒரு வருஷத்தில் கடனைத்திருப்பித்தரக் கூடிய அளவில் அவர்களுக்கு பணம் கொடுத்து உதவி செய்து அந்த இடத்தை அவர்களுக்கே சொந்தமாகக் கூடிய அளவில் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கு வேண்டிய நடவடிக்கைகளை நகரசபை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று இந்தச் சர்க்கார் அவர்களுக்கு உத்தரவு அனுபிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்தப் பிரச்னையை நான் சபையின் முன்னால் வைக்கிறேன்.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM: Mr. Speaker, on 4th September 1958 at 13-10 hours, a serious fire broke out at Uppukaran Patrai Colony, Demellows Road, Perambur Barracks, about 1·3 miles from Vepery Fire Station. Intimation about the fire was received at the Fire Control Room at 13-31 hours and immediately the Mobile Tank Unit and the Trailer Pump unit of Vepery Fire Station were turned out and they reached the scene of fire at 13·37 hours. On arrival it was noticed that nearly 200 thatched huts were involved in the fire and the fire was burning furiously. The vehicles were put to work at once and additional units were immediately summoned in response to which 6 Trailer Pump Units, 4 Mobile Tank Units and one Hose Truck were turned out to assist the Fire Units of Vepery Fire Station. All these fire units engaged themselves in tackling the fire and the fire was completely put out in about 2½ hours. A girl, aged 17 years, caught in one of the burning huts was burnt to death before the arrival of the fire units at the scene of the fire. All the 200 thatched huts were destroyed and one blacksmith's shop was badly damaged. The cause of the fire is reported to be a spark from the blacksmithy.

The estimated value of property involved in the fire accident was Rs. 50,000 of which property worth about Rs. 40,000 approximately was destroyed by the fire. All the fire units worked satisfactorily in dealing with the fire and the spread of the fire was successfully prevented and the fire itself extinguished completely in about 2½ hours. The District Fire Officer, Madras City, directed the fire-fighting operations. The Commissioner, Corporation of Madras and the Personal Assistant to the Collector of Madras visited the spot. Police also came in time and helped the public and the Fire Service Department in putting out the fire. The total number of families affected by the fire and rendered homeless is 201. A cash grant of Rs. 30 per family by way of relief has been proposed to be paid. The total amount of compensation that has to be paid works out to Rs. 6,030.